Regd. No. 2975 ஸ்ரீ:



# ஸ்ரீ ராமாநுஜன் - 290

# SRI RAMANUJAN

Editor:—P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.



வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 58.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

5—12—1972ல் வெளியிடப்பட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன் - 290

சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 25 | பரிதாவிஞூ கார்த்திகைமீ 5—12—72ல் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 2 |
|---|---|---|


## அன்பர்களுக்கு அறிவிப்பு

ஸ்ரீராமாநுஜன் பத்ராதிபர் (P. B. A. ஸ்வாமி) திருவரங்கம் பெரிய கோயி
[ல்] பகற்பத்து மஹோத்ஸவஸேவைக்காக எழுந்தருள்வதால் 5—12—72 தேதி
[மு]தல் 14—12—72 தேதிவரை ஸ்வாமிக்கு விலாஸம் C/o Post Master, Srirangam
(Trichi-6) என்பதாம். ஸ்ரீரங்கத்தில் ஸ்வாமி தங்கியிருக்குமிடம்—தெற்கு உத்தர
[வீ]தி பாங்கட் தர்மசாலை.

## சென்னையில் திருப்பாவை கோஷ்டி

15—12—72 வெள்ளிக்கிழமை தசமியன்று மாலை தநுர்மாதப்பிறப்பு.
[அ]ன்றுமுதல் மார்கழி முப்பதும் ஸ்வாமியின் திருப்பாவை யுபந்யாஸம் வழக்கப்படி
[செ]சன்னையில் உப்பட்டூர் ஆழ்வார்செட்டி சாரிடி ஹாலில் தினந்தோறும் மாலை
[வே]ளைகளில் நடைபெறும். சில நாட்களில் மட்டும் காலைவேளையில் நடைபெறும்.
[இ]து அறிக்கையில் வெளிவரும். ஆக, மார்கழி மாதம் முழுதும் (15—12—72 to
[1]3—1—73) ஸ்வாமிக்கு விலாஸம் கீழ்க்கண்டவாறு—

Sri P. B. ANNANGARACHARYA,
48, 49, Govindappa Naicken Street,
(Vuppattoor Alwar Chetty Charities) MADRAS-1.

சிறு குறிப்பு :— பலகால் தெரிவித்தும் சந்தாபணமனுப்பாமலும் அதுபற்றி
[ஒ]ன்றும் தெரிவியாமலுமிருப்பவர்களுக்குப் பத்ரிகை யனுப்புவது நிறுத்தப்பட்டது.

இப்படிக்கு,

தி. அ. அனந்தாழ்வான்,
Manager, Granthamala Office 1—12—1972.

# நம்மாழ்வாரும் நம் கலியனும்

ஆழ்வார்களுள் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய இவ்விருவருக்கும் பல வகைகளில் பொருத்தம் காண்பதனால் இவ்விருவரையும் சேர்த்து அநுபவிக்கிறோமிங்கு. "பராங்குச பரகால யதிவராதிகள்" என்றருளிச்செய்த முன்னோர்களின் திருவுள்ளத்திலும் இப்பொருத்தம் உறைந்திருப்பதேயாம். திருவரங்கம் பெரிய கோயிலில் திருவத்யயனோத்ஸவத்தில் மற்றையாழ்வார்களிற்காட்டிலும் இவ்விருவர்க்குமுண்டான சேர்த்திச் சிறப்பைக் கட்கூடாகவுங் காண்கிறோம். நம்மாழ்வாரருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழியென்னும் நான்கு திவ்வியப் பிரபந்தங்களானவை அங்கிகளான நான்கு வேதங்களென்றும், திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் என்னும் ஆறு திவ்வியப் பிரபந்தங்களானவை ஆறு அங்கங்களென்றும் கொள்ளப்படுவது ஸம்பிரதாயம். அதாவது, வடமொழியில் அங்கிகளான வேதங்கள் ருக், யஜுஸ், ஸாம, அதர்வணமென்று நான்காயும், அவற்றுக்கு அங்கங்கள் சீக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று ஆறாயுமிருப்பது போலே தென்மொழியிலும் இங்ஙனே கொள்ளப்படுவதாக வுணரத்தக்கது.

மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் திருமங்கையாழ்வார்க்கு இட்டருளின இரண்டு பாசுரங்களில் இரண்டாவது பாசுரம் "மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன், ஆறங்கங்கூறவவதரித்த—வீறுடைய கார்த்திகையில் கார்த்திகைநாள் இன்றென்று காதலிப்பார் வாய்த்த மலர்த்தாள்கள் நெஞ்சே! வாழ்த்து" என்பதாம். மாறன்—நம்மாழ்வார்; அவர் பணித்த தமிழ்மறை—திருவிருத்தம் முதலான நான்கு திவ்வியப் பிரபந்தங்கள். மங்கையர்கோன் கூறின ஆறங்கம்—பெரிய திருமொழி முதலான ஆறு திவ்வியப் பிரபந்தங்கள்.

மணவாள மாமுனிகள் இங்ஙனேயருளிச்செய்தது "வேதசதுஷ்டய—அங்கோபாங்கங்கள் பதினாலும் போலே இந்நாலுக்கும் இருந்தமிழ்நூற் புலவர் பனுவலாறும் மற்றையெண்மர் நன்மாலைகளும்" (43) என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையை அடியொற்றியேயாம். இங்கே ஒரு சங்கை தோன்றும்; நம்மாழ்வாருடைய பிரபந்தங்கள் நான்காயும், திருமங்கையாழ்வாருடைய பிரபந்தங்கள் ஆறாயும் அவதரித்திருப்பதுகொண்டே இப்படி அங்காங்கி பாவம் சொல்லிவிடலாமோ? வடமொழியில் வேதாங்கங்களாகச் சொல்லப்பட்டுள்ள சீக்ஷை, வியாகரணம், சந்தஸ்ஸு, நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பவையாறும் வேதங்களின் பொருளை நிர்ணயிப்பதற்கு இன்றியமையாதனவாயிருப்பதால் அவற்றை அங்கங்களென்னப் பொருத்தமுண்டு. இங்கு அப்படியில்லையே. பெரிய திருமொழி முதலான திருமங்கையாழ்வார் பிரபந்தங்களைக்கொண்டு திருவிருத்தம் முதலான நம்மாழ்வார் பிரபந்தங்களின் பொருளை நிர்ணயிப்பதென்பது கூடுமதன்றே. ஆதலால், நான்கு, ஆறு என்கிற லக்கத்தை மட்டுங்கொண்டு 'அவை அங்கி, இவை அங்கம்' என்று சொல்லிவிடலாமோ ?— என்று சங்கிக்க நேரும்.

இதற்குச் சுருக்கமாக வுணர்த்துகின்றேம். வடமொழியிலுள்ள வேதாங்கங்கள் வேதத்திற்கு உபகாரகங்கள் என்று கொள்ளப்படுவதாகத்தானே தேறி நிற்கும். அப்படியே திருமங்கையாழ்வாருடைய பிரபந்தங்கள் நம்மாழ்வாருடைய பிரபந்தங்களுக்கு உபகாரகங்கள் என்று கொள்ளக் குறையில்லை. ஆயிரத்திற்குமேற்பட்ட பாசுரங்களையருளிச் செய்தவரென்கிற பெருமை நம்மாழ்வார்க்கும் திருமங்கையாழ்வாருக்குமொக்கும். எம்பெருமானை நம்மாழ்வாரநுபவிக்கிற வகைகளும், திருமங்கையாழ்வாரநுபவிக்கிற வகைகளும் பெரும்பாலுமொத்திருக்கின்றன. 1. ப்ரக்ருதி ஸம்பந்தத்தினுடைய ஹேயத்தன்மையைப் பேசிக்கொண்டே பிரபந்தம் தொடங்குகை; 2. எம்பெருமான் பக்கலில் அளவுகடந்த ப்ராவண்யத்தைப் பாசுரந்தோறும் வெளியிடுகை; 3. அதில் அர்ச்சாவதாரத்தில் மிக்க அபிநிவேசத்தைக் காட்டுகை; 4. எம்பெருமானோடு கலவியும் பிரிவும் மாறிமாறி வருகை; 5. தம் வாக்காலே பேசுமளவோடு நில்லாமல் பெண்மையெய்தியும் பேசுகை; 6. தூது விடுதல்; 7. இரவில் படும் நுயரம் பொறுக்கமுடியாமைகூறல்; 8. எம்பெருமானுகத் தம்மை யனுகரித்துப் பேசுதல்; 9. மடலெடுக்கை; 10. இந்திரியங்களுக்கு ஆற்றவொண்ணுது கதறுகை; 11. எம்பெருமானுடைய சுதந்திரத்தை நினைத்து அஞ்சுகை; 12. அடிக்கடி ப்ரபத்தி செய்கை; 13. ஆர்த்தியினுடைய கரை புரட்சி; 14. பிறர் துன்பம் பொறுமல் பலகாலும் ஹிதம் சொல்லுகை...... முதலான பலவும் இவ்வாழ்வார்களிருவர்க்கும் ஒத்திருக்கும். இவற்றையெல்லாம் விரிவாக விளக்கி மகிழ்ந்து மகிழ்விக்க வேண்டியே இஃதெழுதப் புகுந்தபடி.

நம்மாழ்வார் விரிவாக அருளிச்செய்தவற்றைத் திருமங்கையாழ்வார் சுருக்கிப் பேசுவர்; அவர் சுருக்கியருளிச்செய்தவற்றை இவர் விரித்துப்பேசுவர். விபவாவதாரத்திலோ அர்ச்சாவதாரத்திலோ நம்மாழ்வார்கொண்ட அபிநிவேசத்தை இவ்வாழ்வார் மிக்கவுகப்புடனெடுத்துக் காட்டுவரென்னுமிவ்விரண்டு விஷயங்கள் முந்துறமுன்னம் ரஸித்து அநுபவிக்கத் தக்கவை. முன்னம் இதையநுபவிப்போமாக.

## நம்மாழ்வார் விஸ்தரித்ததை இவ்வாழ்வார் சுருக்கியது

திருவாய்மொழியில் (ஐந்தாவது பத்து, ஆருவது பதிகம்) *கடல் ஞாலஞ் செய்தேனும் யானே யென்னும்* என்று தொடங்குவது தாய்ப்பாசுரமாக அமைந்தது; மகள் ஸர்வேச்வரனுகத் தன்னையனுகரித்துப் பேசுகிறபடியை வெகு விரிவாகச் சொன்னது. இதைத் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (8-2-6) ஒரே பாசுரத்தினுல் சுருக்கினுர். *வடவரை நின்றும் வந்து, இன்று கணபுரமிடவகை கொள்வது யாமென்று பேசினுள்* என்கிற பாசுரங் காண்க. அவ்வாழ்வாருடைய அநுகாரம் தாய்ப்பேச்சில் அமைந்தது போலவே இவ்வாழ்வாருடைய அநுகாரமும் தாய்ப்பேச்சில்தான் அமைந்தது. அடுத்தபடி எம்பெருமானுக்குத் தூது விடுவதென்பதை யெடுத்துக்கொள்வோம். இது திருவாய்மொழியில் *அஞ்சிறைய மடநாராய்* *வைகல் பூங்கழிவாய்* *பொன்னுலகாளீரோ* *எங்கானலகங் கழிவாய்* என்னும் நான்கு பதிகங்களில் நாற்பது பாசுரங்களினுல் விரிவாக நிகழ்ந்திருக்கிறது; இதனைத் திருமங்கையாழ்வார் மிகச் சுருக்கமாகப் பேசினர். பெரிய திருமொழியில் (3-6) *தூவிரிய மலருழக்கியென்னும் பதிகம் தூது விடுவதாகத் தொடங்கப்பட்டு

நான்கு பாசுரத்தோடு தூதுவிடுதல் நிறுத்தப்பட்டுவிட்டது. மேலேயும் (9-4) *காவார் மடற்பெண்ணை* என்னும் பதிகத்தில் இரண்டு பாசுரங்களில் மட்டுமே தூதுவிடுதல் நிகழ்ந்தது. இனி மற்றொன்று கேண்மின்; சோறு கூறைக்காக நரஸ் துதி பண்ணி ஸ்வரூப நாசமடையும் ஸம்ஸாரிகளை நோக்கி நம்மாழ்வார் (3-9) *சொன்னால் விரோதமிது* என்னும் பதிகத்தில் வெகு விரிவாக ஹிதங் கூறினர். இவர் (1-1-7) *கண்டவா தொண்டரைப் பாடும் சொற்பொருளாளீர்! சொல்லு கேன்வம்மின் சூழ்புனற் குடந்தையேதொழுமின், நற்பொருள்காண்மின், பாடி நீருய்மின் நாராயணாவென்னும் நாமம்* என்று அதனைச் சுருக்கிப் பேசினர். மேலும் ஆபாஸ பந்துக்களின் ஹேயத் தன்மையைத் திருவாய்மொழியில் (9-1) *கொண்ட பெண்டிர் மக்களுற்றார்* என்னுமொரு பதிகத்தில் மிக விரிவாகவுரைத்தார் நம் மாழ்வார்; அதனை இவ்வாழ்வார் பெரிய திருமொழியில் (8-9-7) *பெற்றாரும் சுற்றமுமென்றிவை பேணேன் நான், மற்றாரும் பற்றிலேன்* என்று சுருக்கியுரைத் தனர். இன்னமும், ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்துவத்தை நம்மாழ்வார் *உயர் வறவுயர் நலம்* திண்ணன் வீடு *அணைவதரவணை மேல் *ஒன்றுந்தேவும் என்னும் நான்கு பதிகங்களில் மிக விரிவாகவருளிச்செய்தார்; அதனை இவ்வாழ்வார் பெரிய திருமொழியில் (11-6) *மைந்நின்ற கருங்கடல் வாயுலகின்றி* என்கிற ஒரே பதிகத் தினால் சுருக்கியுரைத்தனர். அவர் விஸ்தரித்ததை இவர் சுருக்குவதென்னுமிதனை மற்றுஞ்சில விஷயங்களிலுங் கண்டு கொள்க.

## நம்மாழ்வார் சுருக்கியதை இவ்வாழ்வார் விஸ்தரித்தது

அவர் விஸ்தரித்ததை இவர் ஸங்க்ரஹித்தமை கீழே காட்டினோம். அவர் ஸங்க்ரஹித்ததை இவர் விஸ்தரித்தமை இங்கே காட்டுவோம். நம்மாழ்வார் திரு வாய்மொழியில் (5-3) *மாசறு சோதிப் பதிகத்தில் *குதிரியாய் மடலூர்துமே* என்றும் *யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந் துழாய் மலர் கொண்டு சூடுவோம்* என்றும் இரண்டு துண்டுகளால் மடலூர்தலை ப்ரஸ்தாவித்தார்; மடலூர்தலைப்பற்றி நம்மாழ்வார் திருவாக்கில் வேறு பேச்சு சிறிதும் கிடையாது. இங்ஙனே சுருக்கமாக உள்ளதை இவ்வாழ்வார் சிறிய திரு மடல், பெரிய திருமடல் என்னுமிரண்டு திவ்ய ப்ரபந்தங்களினால் மிக விவரித் துரைத்தார். அவருடைய இரு சிறுவார்த்தைகளுக்கு இவர் இரண்டு பிரபந்தங்கள் இட்டருளினாராயிற்று. அன்றியும், நாராயண மந்திரத்தின் சிறப்பை நம்மாழ்வார் திருவாய்மொழியில் (1-2-10) *எண் பெருக் கந்நலத் தொண்பொருளீறில, வண் புகழ் நாரணன்* என்றும் (10-5-1) கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே* என்றும் இரண்டு சிறு பாசுரங்களினா லருளிச்செய்தனர். அதனை இவ்வாழ்வார் பெரிய திருமொழியில் (1-1) *வாடினேன் வாடியென்றும் (6-10) *கிடந்த நம்பி குடந்தை மேவி* யென்றுமிரண்டு பதிகங் களில் "நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" "நாமஞ் சொல் லில் நமோ நாராயணமே" என்றும் ஒரு காற் சொன்னாப்போலே ஒன்பதின்காற் சொல்லிவைத்தனர். இன்னமும், எம்பெருமான் ஸம்ஸாரி சேதந ஸம்ரக்ஷணார்த்த மாகப் பல திருவவதாரங்கள் செய்தருளும்படியை நம்மாழ்வார் திருவிருத்தத்தின்

தொடக்கத்தில் *உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தா யிமையோர் தலைவா* என்றும், திருவாய்மொழியில் (5-1-10) *மீனுயாமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய், கானுரேனமுமாய்க் கற்கியாமின்னங்கார் வண்ணனே* என்றும் சுருக்கமாகப் பேசிவைத்தார். அதனை இவ்வாழ்வார் பெரிய திருமொழியில் (8-8) *வானோரளவும் முது முந்நீர், (11-4) *நிலையிடமெங்குமின்றி* என்கிற இரண்டு பெரிய பதிகங்களிலும் மிக விரித்துரைத்தார். நம்மாழ்வார் சுருக்கியதை இவ்வாழ்வார் விஸ்தரித்தாரென்னுமிதனை மற்றுஞ் சில விஷயங்களிலுங் கண்டுகொள்க.

## விபவ அர்ச்சைகளில் அபிநிவேச விசேஷங்களை யெடுத்துக்காட்டுதல்

மத்ஸ்ய கூர்ம வராஹ ராம க்ருஷ்ணாதியவதாரங்களுக்கு விபவாவதாரமென்று பெயர். இவற்றுள் எந்த அவதாரத்தில் நம்மாழ்வார்க்கு அபிநிவேசாதிசயமென்று ஆராய்ந்து, முதற் பிரபந்தமான திருவிருத்தத்தின் முடிவில் "ஏனத்துருவாயிடந்த—ஞானப் பிரானையல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே" என்றும், திருவாய்மொழியின் முடிவில் "கோலவராகமொன்றாய் நிலங்கோட்டிடைக் கொண்ட வெந்தாய்" என்றுமருளிச் செய்திருப்பதை ஊன்றி நோக்கின திருமங்கையாழ்வார் வராஹாவதாரமே இவர் மிகவுமீடுபட்டதென்று துணிந்து தமது பெரிய திருமொழியின் தொடக்கத்தில் *பன்றியாயன்று பாரகங்கீண்ட பாழியானழியானருளே* என்று அவ்வவதாரந்தன்னையே போற்றினர். இனி அர்ச்சையிற் செல்வோம். கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திவ்யதேச மூர்த்திகளுக்கு அர்ச்சாவதாரமென்று பெயர். இவற்றுள் நம்மாழ்வாருடைய ஈடுபாடு எந்த திவ்ய தேசத்தில் மிக்கதென்று ஆராய்ந்த திருமங்கையாழ்வார் திருக்குடந்தையிலென்று கண்டார். (எங்ஙனேயென்னில்) திருவாய்மொழியின் முடிவில் *சூழ் விசும்பணி முகிற்பதிகம் திருநாட்டிலநுபவத்தைப் பரக்கப் பேசுவது; அங்கு லீலா விபூதியின் நினைவு வருவதற்கு ப்ரஸக்தி கிடையாது. அப்படியிருந்தும் *குடந்தையெங் கோவலன் குடியடியார்க்கு — தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர்* என்கிற பாசுரம் மிகவற்புதமாக அவதரித்துள்ளது. அங்குள்ள ஸூரிகள் இவர்களையுப்சரிக்கும்போது 'இவர்கள் திருக்குடந்தையெம்பெருமான் திருக்குணங்களிலே ஸந்தானமாக ஈடுபட்டவர்கள்' என்று சொல்லித் தொடர்ந்து தோத்திரஞ் செய்ததாகச் சொல்லிற்று. திருவரங்கம் திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை முதலான திருப்பதிகள் கிடக்க, அவற்றையெல்லாம் விட்டுத் திருக்குடந்தையிலீடுபாட்டை யெடுத்துரைத்துத் தோத்திரஞ் செய்ததாகவருளிச் செய்ததின் காரணம் ஆராயுமளவில், திவ்யப் பிரபந்தங்களெல்லாம் லோபித்திருந்த காலத்தில் திருக்குடந்தை விஷயமான *ஆராவமுதேயென்கிற பதிகமொன்றுமட்டும் ஸ்ரீமந் நாதமுனிகள் திருச்செவியிலேபட அதிலிருந்தே நாலாயிரமும் புநரவதாரம்செய்ய ப்ராப்தமாயிற்றென்று ஐதிஹ்யமாகையினாலே ஆழ்வார்க்கும் அங்குள்ள ஸூரிகட்கும் பவிஷ்யத்ஜ்ஞானமிருந்தே இப்படிப் பாசுரம் தோன்ற நேர்ந்ததென்பது ரஹஸ்யமருமம். இவ்வாறாக நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தையிலே அபிநிவேசமிருக்கும்படியை யுணர்ந்தே திருமங்கையாழ்வார் ஸ்வப்ரபந்தாரம்பத்திலேயே (1-1-2) *சூழ்புனற் குடந்தையே தொழுது* என்றும் (1-1-7) *சூழ்புனற் குடந்தையே தொழுமின்*

என்றும் அருளிச்செய்ததன்றியும், சரமப்பிரபந்தமான திருநெடுந்தாண்டகத்தை முடித்தருளும்போதும் ¤தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை யடி நாயேன் நினைந்திட்டேன்¤ என்று நம்மாழ்வாரைப் போலவே திருக்குடந்தை நினைவாகவே முடித்தருளினார்.

அதற்கடுத்த பாசுரத்திலும் ஒரு விசேஷத்தை அற்புதமாகக் காட்டி நின்றார்; (அதாவது) ¤அன்னமாய் முனிவரோடு அமரரேத்த அருமறையை வெளிப்படுத்தவம்மான் தன்னை¤ என்று நம்மாழ்வார்க்குத் திருநாட்டில் திருக்குடந்தை நினைவு வருவதற்குறுப்பான ஐதிஹ்யத்தை முத்ராலங்கார ரீதியில் காட்டி வைத்தார். ஆசார்ய ஹ்ருதயத்தில் (151) "நாதயாமுனர் போல்வாரை அன்னமென்னும்" என்றருளிச்செய்தபடி அன்னமாயும், நாதமுனிகளென்னும்படி முனிவராயுமுள்ள ஸ்ரீமந் நாதமுனிகளோடே கூட (அமரர் ஏத்த) திருக்குருகூரிலுள்ள நிலத் தேவர்கள் துதிக்க (அருமறையை வெளிப்படுத்த வம்மான்) "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்கிறபடியே அருந்தமிழ் மறையை நம்மாழ்வார் வெளியிட்டருளினபடி காட்டிற்றாயிற்று. பலபல திருப்பதிகட்கு 1, 2, 3, 4, 5, 10 பதிகங்கள் பாடிவருகின்ற திருமங்கையாழ்வார் திருக்குடந்தைக்குத் துணுக்கைப் பாசுரங்கள் தவிர ஒரு பதிகமும் பாடாதொழிந்தது எதனாலேயென்று பலர் விமர்சிப்பதுண்டு. நம்மாழ்வார் பணித்தருளின ¤ஆராவமுதே பதிகத்தை ஆழ்ந்து அநுபவித்தவிவர் 'இதுபோலவோ இதனில் மேம்படவோ நம்மால் பாட இயலாது; ஆகவே இத்தலத்திற்குப் பதிகம் பாடுதலில் நாம் இறங்கத் தகாது' என்றுகொண்டே பதிகம் பாடாதொழிந்தனரென்பது தத்துவம்.

## தாமான தன்மையிற் பேசுவதோடு நில்லாமல் பெண்மையெய்தியும் பேசுவதில் ஒற்றுமை

நம்மாழ்வார் குருகூர்ச்சடகோபனான நிலைமையில் நின்று மட்டும் பேசாமல் தலைமகளாக நின்றும் தாயாக நின்றும் தோழியாக நின்றும் பேசுவதைத் திருவிருத்தத்திலும் திருவாய்மொழியிலும் காண நின்றோம். திருவிருத்தம் நிற்க. திருவாய்மொழியில் தலைமகளாக நின்று பேசின பதிகங்கள் பதினேழு. தாயாக நின்று பேசின பதிகங்கள் ஏழு. தோழியாக நின்று பேசின பதிகங்கள் மூன்று. ஆக இருபத்தேழு பதிகங்கள் வேற்று வாயாலே பேசினவை. மற்ற எழுபத்துமூன்று பதிகங்கள் தாமான தன்மையில் நின்று பேசினவை.

## திருவாய்மொழியில் தலைமகள் பாசுரமான பதிகங்களாவன:

1. அஞ்சிறைய மடநாராய்.
2. வாயுந்திரையுகளும்.
3. ஏறாளுமிறையோனும்.
4. மாசறுசோதி
5. ஊரெல்லாந்துஞ்சி.
6. எங்ஙனேயோவன்னைமீர்.
7. மானேய் நோக்குநல்லீர்.
8. வைகல் பூங்கழிவாய்.
9. மின்னிடை மடவார்கள்.
10. பொன்னுலகாளீரோ.
11. வெள்ளைச்சுரிசங்கொடு.
12. ஏழையராவியுண்ணும்.
13. நங்கள் வரிவளையாயங்காளோ.
14. இன்னுயிர்ச்சேவலும் நீரும்.
15. எங்கானலகங்கழிவாய்.
16. மல்லிகைகமழ் தென்றல்.
17. வேய்மருதோளிணை

ஆக 17.

## தாய் பாசுரமான பதிகங்களாவன :

1. ஆடியாடி.
2. பாலனாய்.
3. மண்ணையிருந்துதுழாவி
4. கடல் ஞாலம்.
5. மாலுக்கு.
6. உண்ணுஞ்சோறு.
7. கங்குலும் பகலும்.

ஆக. 7.

## தோழி பாசுரமான பதிகங்களாவன :

1. தீர்ப்பாரையாமினி
2. துவளில்மாமணிமாடம்.
3. கருமாணிக்கமலே.

ஆக. 3.

இவ்வகையில் திருமங்கையாழ்வாரனுபவங்களை இனி யெடுத்துக்காட்டுவோம். பெண்மை யெய்திப் பேசும் பாசுரங்களில் இவ்வாழ்வார்களிருவர்க்கும் பெரும்பாலும் கருத்தொற்றுமை விளங்குமாற்றை உபபாதிக்கக் கேண்மின். மகள் பாசுரமும் தாய் பாசுரமும் தோழிபாசுரமுமானவை திருவாய்மொழியில் 27 பதிகங்களென்று காட்டினோம். திருமங்கையாழ்வார் பாசுரங்களில் தலைவி பாசுரமும் தாயார் பாசுரமுந்தவிரத் தோழி பாசுரமாக ஒரு பதிகமும் அவதரிக்கவில்லை. தலைவி தோழியோடு ஸம்பாஷிப்பதான பாசுரங்களுண்டு; திருவாய்மொழியில் தோழிபாசுரமாகவே மூன்று பதிகங்கள் அவதரித்திருப்பது போல இங்கில்லையென்பது விவக்ஷிதம். பெரிய திருமொழியிற் பதினோராம்பத்தில் (ஐந்தாவதான) *மானமருமென்னோக்கிப்பதிகம் தோழிமார் பாசுரமன்றோ? என்ன வேண்டா; தோழியரிருவர் தாங்கள் பரஸ்பரம் ஸம்பாஷிக்கும் முகத்தினால் எம்பெருமானுடைய பரத்வ ஸௌலப்யங்களை வெளியிடும் பதிகம் அது. பரகாலநாயகியின் பிரகிருதியைப்பற்றின பேச்சு கிடையாததலால் தோழி பாசுரமன்றென்க. ஆகவே திருமங்கையாழ்வாரருளிச் செயல்களில் (பெண்மையில்) தலைவி பாசுரமும் தாய் பாசுரமுமே உள்ளதென்றதாயிற்று. எனினும், நம்மாழ்வாரருளிச் செயலிற் போல இங்கும் அந்யாபதேசப் பதிகங்கள் இருபத்தேழு தேறியுள்ளன. அவற்றின் விவரணம் வருமாறு;—

## பெரியதிருமொழியில் தாய் பாசுரமும் தலைவி பாசுரமுமான பதிகங்கள்

1. திவளும்வெண்மதிபோல்.
2. கள்வன்கொல்யானறியேன்.
3. கவளயானை கொம்பொசித்த.
4. வெருவாதாள்வாய் வெருவி.
5. சிலையிலங்குபொன்னாழி.
6. தெள்ளியீர் தேவர்க்குந்தேவர்.
7. மூவரில் முன்முதல்வன்.
8. புள்ளுருவாகி நள்ளிருள்வந்த (திருநெடுந்தாண்டகத்தில்)
9. பட்டுடுக்கும்பதிகம்.

—தலைவிபாசுரமான பதிகங்கள்.

10. திரிபுரமூன்றெரித்தானும்.
11. தூவிரியமலருழக்கி.
12. தந்தைகாலில் பெருவிலங்கு.
13. கரையெடுத்தசுரிசங்கும்.
14. விண்ணவர் நங்கள்பெருமான்.
15. தந்தைகாலில் விலங்கற.
16. பொன்னிவர்மேனிமரதகத்தின்.
17. தன்னை நைவிக்கிலென்.
18. காவார்மடற்பெண்ணை.
19. தவளவிளம்பிறைதுள்ளு.
20. காதில் கடிப்பிட்டு.
21. திருத்தாய் செம்போத்தே.
22. குன்றமொன்றெடுத்தேந்தி.
23. குன்றமெடுத்துமழைதடுத்து.
24. மன்னிலங்குபாரதத்து.
25. சிறிய திருமடல்.
26. பெரிய திருமடல். (திருநெடுந்தாண்டகத்தில்)
27. மைவண்ண நறுங்குஞ்சிப்பதிகம்.

ஆக 27.

அந்யாபதேசப்பதிகங்கள் நம்மாழ்வாருடையனவும் 27; திருமங்கையாழ்வாருடையனவும் 27 என்று தேறிற்று. இனி இவற்றிலுள்ள ஸாதர்மிய வைதர்மியங்களாகிற வைலக்ஷண்யத்தை யநுபவிப்போம்.

**திவளும் வெண்மதிபோல்.** திருவாய்மொழியில் *கங்குலும் பகலும் போலேயாம் இப்பதிகம். அவருடைய தாய்ப்பேச்சில் அது முடிவுபதிகம், இவருடைய தாய்ப்பேச்சில் இது முதற்பதிகம் என்பது வாசி. பிரமேயம் இரண்டிலுமொன்றே. ''இவள் திறத்து என்செய்கின்றாயே'' என்று வினவுதல் அங்கு. ''நின்தாள் நயந்திருந்த விவளை உன்மனத்தால் என்னினைந்திருந்தாய்?'' என்று வினவுதல் இங்கு. இந்த வினா பாட்டுத்தோறு மொக்கும்.

**கள்வன் கொல்யானறியேன்.** திருவாய்மொழியில் *உண்ணுஞ்சோறு பருகுநீர் போலேயாம் இப்பதிகம். தாயை விட்டு மகள் பிரிந்து போதல் இரண்டிலுமொக்கும். திருக்கோளூரை வினவிக்கொண்டு தனியே போனாள் பராங்குச நாயகி; வயலாலி மணவாளன் கொண்டு போகப் போனாள் பரகாலநாயகி.

**கவளயானை கொம்பொசித்த.** திருவாய்மொழியில் *ஆடியாடியகங்கரைந்து போலேயாம் இப்பதிகம். இசை பாடிப்பாடியுருகுதல் ஒக்கும். *எனவள்ளலே கண்ணனே யென்னுமென்றாள் பராங்குச ஜனனி; *கவளயானை கொம்பொசித்த கண்ணனென்னுமென்கிறாள் பரகாலஜனனி.

**வெருவாதாள்வாய் வெருவி.** திருவாய்மொழியில் *பாலனாயேழுலகு போலேயாம் இப்பதிகம். அதில் ''என்செய்கே னென்னுடைப் பேதையென் கோமளம், என் சொல்லு மென்வசமுமல்லள் நங்கைமீர்'' என்றாள் பராங்குசஜனனி; இதில் ''தாய் வாயில் சொற்கேளாள் தன்னாயத் தோடணையாள்'' இத்யாதியுரைக்கின்றாள் பரகாலஜனனி.

**சிலையிலங்கு, தெள்ளியீர்தேவர்க்கும்.** திருவாய்மொழியில் *கடல் ஞாலம் செய்தேனும் யானேயென்னு மென்கிற வொரு பதிகம் போன்றது இவ்விரண்டு பதிகமும். அதில் பாட்டுத்தோறும் ''ஈசன்வந்தேறக்கொலோ'' என்று திருத்தாயார் சொன்னாப்போலே *சிலையிலங்கு பொன்னாழியில் பாட்டுத் தோறும் ''கண்ணபுரத் தம்மானைக் கண்டாள் கொலோ!'' என்கிறாள் திருத்தாயர். அதில் 'யானே, யானே' என்று எம்பெருமானுடைய தாதாத்ம்யாநுஸந்தானம் பண்ணின படியைத் திருத்தாயார் சொன்னாப் போலவே *தெள்ளியீரில் ''வடவரை நின்றும் வந்து இன்று கணபுரமிடவகை கொள்வது யாம் என்று பேசினாள்'' என்று தத் தாதாத்ம்யாநுஸந்தானம் பண்ணுகிறபடியை இத்திருத்தாயார் சொல்லுகிறாள்.

**மூவரில் முன்முதல்வன்.** திருவாய்மொழியில் *மண்ணையிருந்து துழாவி போன்றதாமிப்பதிகம்; அதில் ''பிரான்கிடக்கும் கடலென்னும்''—இதில் ''முழங்கார் கடலுள் கிடந்து.'' அதில் ''எல்லாவுலகு கண்ணன் படைப்பென்னும்'' — இதில் ''பூவலருந்தி தன்னுள் புவனம் படைத்து,'' ''மூவுலகும் படைத்த முதல் மூர்த்தி தன்னை'' இங்ஙனே கண்டு கொள்க. இனி* புள்ளுருவாகி நள்ளிருள் பதிகத்திலும், (திருநெடுந்தாண்டகத்தில்) *பட்டுடுக்கும் பதிகத்திலும் பராங்குச ஜனனியின் பேச்சுக்களின் ப்ரபஞ்சனப்ரணாளிகள் உய்த்துணரத்தக்கது. திருவிருத்தத்தில்

அருளார் திருச்சக்கரத்தாலென்னும் தாய்பாசுரத்தில் "ஈங்கோர் பெண்பால் பொருளோ வெனுமிகழ்வோ?" என்ற வார்த்தையே *புள்ளுருவாகியில் ஒன்பது பழமொழிகளால் விஸ்தரிக்கப்பட்டுள்ளது. அங்கு அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரையில் விளக்கம் காண்க.

பட்டுடுக்கும் பதிகத்திலிருந்து கண்டதோர் விசேஷார்த்தம்—திருநெடுந்தாண்டகத்தில் *பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவைபேணுள்* என்கிற பதினோராம் பாட்டு முதலாக "தேராளும் வாளரக்கன் செல்வம் மாள" என்கிற இருபதாம் பாட்டு வரையில் தாய்பாசுரமான பதிகம். இதில் *பட்டுடுக்கும் பாசுரத்தில் "மட்டுவிக்கி மணிவண்டு முரலுங்கூந்தல்" என்று பரகால நாயகி குறிக்கப் படுகிருள். இதிலிருந்து நாமைகதேச க்ரஹணந்யாயத்தாலே பரகால நாயகிக்கு மணிவண்டு என்றொரு திருநாமம் ப்ரஸித்தமாகிறது. இதை நெஞ்சில் திடமாக வைத்துக்கொண்டு மேல் விஷயம் குறிக்கொள்க. பெரிய திருமொழியில் (6-6) *அம்பரமும் பெருநிலமென்று தொடங்கும் திருநறையூர்ப் பதிக மொன்றில் "வம்பவிழுஞ் செண்பகத்தின் வாச முண்டு மணிவண்டு வகுளத்தின் மலர் மேல் வைகு" என்றுள்ளது. மணிவண்டானது முந்துற முன்னம் செண்பகப்பூவை அநுபவித்து விட்டுப் பிறகு மகிழ மலரிலேயே படுகாடு கிடப்பதாக இங்குச் சொல்லப்படுகிறது. "யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோத: வகுலாமோத வாஸிதம்" [யதிராஜஸப்ததி] என்றதற்குச் சேர திருவாய்மொழியநுபவத்தில் ஊன்றியிருப்பதுதான் வகுளத்தின் மலர் மேல் வைகுதலாகச் சொல்லிற்றிங்கு. ஆழ்வார்கள் திரளில் திருமங்கையாழ்வார் கடைக் குட்டியாகையாலே மற்றுள்ளவாழ்வார்களனைவருடையவும் திவ்வியப் பிரபந்தங்களை இவர்தாம் அநுபவித்தவர். அதனைச் *செண்பகத்தின் வாச முண்டெனபதனால் காட்டி, அவை யெல்லாவற்றினுள்ளும் நம்மாழ்வாரருளிச்செயலிலேயே தாம் ஊன்றியிருந்தபடியை *வகுளத்தின் மலர்மேல்வைகு* என்பதனால் விளக்கினபடி. இங்குத் திருமங்கையாழ்வாராகிய தம்மையே மணிவண்டென்பதனால் குறித்தனரென்பது உறுதி. இதை முன்னடியே நம்மாழ்வார் தெரிந்து கொண்டவராதலால் திருவிருத்தத்தில் "வண்டுகளோ! வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ உண்டு களித் துழல்வீர்க்கு ஒன்றுரைக்கியம், ஏனமொன்ருய் மண்துகளாடி வைகுந்த மன்னுள் குழல்வாய் விரை போல் விண்டு கள்வாரும் மலருளவோ நும்வியலிடத்தே." என்றருளிச் செய்தார். இங்கு "வண்டுகளோ! வம்மின்" என்றது திருமங்கையாழ்வாரையே விளித்தபடி. விளித்து என்ன வினவுகிருர்? நீர் எவ்வளவோ ஸ்ரீஸூக்திகளையுண்டு களித்துத் திருப்பதிகள் தோறும் உழல்கின்றீரே, திருவாய்மொழி போன்றது பரம போக்யமானதொரு பிரபந்தம் கடல் சூழ்ந்த மண்ணுலகில் எங்கேனுங் கண்டதுண்டோ? என வினவுகிறபடி. அந்த வினவுக்கே இவர் விடையிறுக்கிருர்—'ஸ்வாமிந்! கண்டதில்லை; ஆனது பற்றியே வகுளத்தின் மலர்மேல் தானே வைகிக்கிடக்கிறே' னென்று........ஆக இதுவரையில் தாய் பாசுரமான பதிகங்களின் ரஸாநுபவம் பண்ணினோம்: இனி தலைவி பாசுரமான பதிகங்களின் ரஸாநுபவம் பண்ண ப்ராப்தமாகிறது. இது மிக விரிவாகச் செய்ய வேண்டும்; தற்காலம் ஸங்க்ஷேப ருசியால் "ரஸிகர்களுக்கும் விசேஷப் பொருத்தங்கள்" என மகுட

மிட்டு அம்மகுடத்திற்கு இணங்கிய இருபது விஷயங்களை நிரூபிப்பதனால் க்ருத க்ருத்யனாகிறேன். பதிகங்களின் மீது விரித்துரைப்பது மற்றொரு காலாகும்.

ரஸிகர்கள் உகக்கும் விசேஷப் பொருத்தங்கள்:—(1) வேதத்தில் (தைத்திரீய யஜுர் ப்ராஹ்மணத்தில்) "க்ருத்திகா: ப்ரதமம். விசாகே உத்தமம்" என்று ஓதப்பட்டுள்ளது. திருமங்கையாழ்வாருடைய நக்ஷத்ரமான க்ருத்திகையும், நம்மாழ்வாருடைய நக்ஷத்ரமான விசாகமும் விசேஷித்தோதப்பட்டன. (2) எதிரிகளின் செருக்கையடக்குந்திறத்தில் பராங்குசனென்கிற திருநாமமும் பரகாலனென்கிற திருநாமமும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. (3) அடியார்களையுகப்பிக்கும் விஷயத்தில் ஒருவர் இன்பமாரி யென்றும், மற்றொருவர் அருள்மாரியென்றும் பேர்பெற்றனர். திருவாய்மொழியில் (4-5-10) *வண்டமிழ்நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்பமாரியே* என்று நம்மாழ்வார் தம்மை இன்பமாரியாகத் தெரிவித்தார்; பெரிய திருமொழியில் (3-4-10) *அங்கமலத்தடவயல் சூழாலிநாடன் அருள்மாரிபரட்டமுக்கி அடையார்சீயம்* என்று திருமங்கையாழ்வார் தம்மை அருள்மாரியாகந் தெரிவித்தார். முறையே ஆனந்தவர்ஷுகர், கருணாவர்ஷுகர் என்று பொருள். (4) திருவிண்ணகர்த் திருப்பதி யெம்பெருமானை உப்பிலியப்பனென்று வழங்குவதைத் தவிர்க்க நம்மாழ்வார் (6-3-9) *தன்னொப்பாரில்லப்பன்* என்றார். திருமங்கையாழ்வார் (8-1-2) *ஒருவரையும் நின்னொப்பாரொப்பிலாவென்னப்பா* என்று அதற்குச் சேமக்காப்பு சாற்றினார். (5) நம்மாழ்வார் திருவாய்மொழியில் (4-4-8) *திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்* என்று பகவத் பக்தர்களான அரசர்களை மதித்துப்பேசினார்; அதை யடியொற்றியே திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் "தென்னன் தொண்டையர்கோன்—மன்னவன் தொண்டையர்கோன் வணங்கும் நீண் முடிமாலை வயிரமேகன்—பல்லவன் வில்லவனென்றுலகில் பலராய் பல வேந்தர் வணங்கு கழற் பல்லவன்—துளங்கு நீண் முடியரசர் தங்குரிசில் தொண்டைமன்னவன் திண்டிறலொருவன்—செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்த கோயில்—இருக்கிலங்கு திருமொழிவாயெண்டோளீசற்கு எழில் மாடமெழுபது செய்துலகமாண்ட திருக்குலத்து வளச்சோழன்" என்றிப்படி பகவத் பக்தர்களான சில சக்ரவர்த்திகளைச் சிறப்பித்துக் கூறினர்.

(6) கண்ணபிரான் திருவாய்ப் பாடியில் *படலடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்குப் பசுவெண்ணெய் களவு காணப்புகுமிடத்தில் தன்னிறத்தினிருட்சியாலும் அவ்விடத்தினிருட்சியாலும் வெண்ணெயிருக்குமிடம் தெரியாமல் தடவா நிற்கையில் யாத்ருச்சிகமாகக் கையிலே வெண்ணெய்த்தாழி தட்டின உவப்பினால் பல்லைத் திறந்து சிரிக்க நேரும்; பூரண சந்திரனுடைய கிரணம்போலே திருமுத்துக்களின் ஒளி புறப்படவே அந்த வொளியையே கைவிளக்காகக் கொண்டு வெண்ணெயை வாரி விழுங்குவனாம் கண்ணன். இதை நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3-8-3) "நாளிளந்திங்களைக் கோள்விடுத்து வேயகம் பால் வெண்ணெய் தொடுவுண்ட ஆனாயர்தாயவனே!" என்ற பாசுரத்தினால் அநுஸந்தித்தார். இதைத் திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் (2-10-6) "உறியார்ந்த நறு வெண்ணெயொளியால் சென்று அங்குண்டானை" என்றநுஸந்தித்தார். இங்கு 'ஒளியால்' என்றது திருமுத்துக்களினொளியால் என்றபடி. இரண்டிடத்திலும் அடியே

னுடைய திவ்யார்த்த தீபிகை நோக்கத் தக்கது. (7) திருவாய்மொழியில் (4-6) *தீர்ப்பாரையாமினியில் கட்டுவிச்சி வருகிறாள்; அவள் தேவதாந்தரக் கட்டுவிச்சியாகையாலே இகழப்பட்டாள்; சிறிய திருமடலிலும் திருநெடுந்தாண்டகத்திலும் வருகிற கட்டுவிச்சி பகவத் ப்ரவணையாகையாலே புகழப்பட்டாள். (8) நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "முலையோ முழுமுற்றும் போந்தில, மொய்பூங்குழல் குறிய, கலையோ வரையில்லை நாவோகுழறும்" என்று பருவத்துக்கு ஏலாத தன்மையைச் சொன்னார். இவரும் "முள்ளெயிறேய்ந்தில கூழை முடிகொடா, தெள்ளிய ளென்ப தோர் தேசிலளென்செய்கேன்" என்றார். (9) நம்மாழ்வார் *பயிலும் சுடரொளியிலும் *நெடுமாற்கடிமையிலும் பாகவத சேஷத்வத்தைப்பேசினார். இவரும் *நண்ணாத வாளவுணரிலும் *கண் சோர வெங்குருதியிலும் அதனைப்பேசினார். (10) நம்மாழ்வார் *ஊரெல்லாந்துஞ்சியிலே இராப்பொழுதில் தனிமைக்கு வருந்தினார். இவர் *தந்தை காலில் விலங்கற வென்னும் திருக்கண்ணபுரப் பதிகத்தில் அதனினும் மிக வருந்தினார்.

(11) நம்மாழ்வார் *ஒரு நாயகத்தில் ஐச்வரியத்தின் அல்பாஸ்திரத்வங்களை விரிவாகப் பேசினார். இவர் (6-2-5)* பாண்டேன் வண்டறையுங்குழலார்கள் பல்லாண்டிசைப்ப, ஆண்டார் வையமெல்லாம் அரசாகி முன்னாண்டவரே மாண்டாரென்றுவந்தார் அந்தோ!* என்று அதைச் சுருக்கமாகப்பேசினார். (12) நம்மாழ்வார் *குரவை யாய்ச்சியரோடு கோத்ததுமென்றபதிகத்தில் க்ருஷ்ணாவதாரசரிதைகளை விரிவாகப்பேசினார். இவரும் அதை *மானமுடைத்துங்களாயர் குலமென்னும் பதிகத்தில் மிக விரித்துரைத்தார். (13) நம்மாழ்வார் *இன்னுயிர்ச் சேவலும் பதிகத்தில் "என்னுயிர்க் கண்ணபிரானை நீர்வரக்கூவகிலீர்" என்று இன்னாப்போடே பேசினார்; இவர் *திருத்தாய் செம்போத்திலே வெறுப்பின்றிக்கே அநுநயமாகப் பேசினார். (14) நம்மாழ்வார் *மின்னிடைமடவாரில் ஊடல் ரஸமநுபவித்தார். இவர் *காதில் கடிப்பிட்டிலே அதே ரஸத்தையநுபவித்தார். (15) நம்மாழ்வார் *உண்ணிலாவிய வைவரால் பதிகத்திலே இந்திரியங்களுக்கு ஆற்ற வொண்ணமல் ஓலமிட்டார். இவர் *திருவுக்குந் திருவாகிய பதிகத்திலே அங்ஙனே ஓலமிட்டார். (16) நம்மாழ்வார் *ஆழியெழப்பதிகத்தில் பல அபதானங்களைப் பேசினார், இவர் *ஏழையேதலனில் அப்படியே. (17) நம்மாழ்வார் "கடியன் கொடியன் நெடியமால்... ஆகிலுங்கொடிய வென்னெஞ்சமவனென்றே கிடக்குமெல்லே" என்று குணக்ருத தாஸ்யமன்றிக்கே ஸ்வரூபப்ரயுக்தமான அடிமையை யநுஸந்தித்தார். இவரும் "வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது, அடியேன் நான்பின்னுமுன் சேவடியன்றி நயவேன்" என்று அதனை விவரித்தார். (18) நம்மாழ்வார் திருவிருத்தத்தில் *சூட்டு நன்மாலைகள் பாசுரத்தில் கண்ணன் வெண்ணெய் தொடுவுண்பதற்காகவே திருவாய்ப்பாடிக்குப் போந்ததாக அருளிச்செய்தார். இவரும் "காணாயன்கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்றவாணாயன்" என்றார். (19) நம்மாழ்வார் எத்திற முரலினோடிணைந் திருந்தேங்கிய வெள்ளிவே" என்று ஒருகால் சொல்லித் தரைப்பட்டார். இவர் "அவன் காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப் புண்டிருந்தவனே" என்று ஒருகால் சொன்னாப்போலே ஒன்பதின்கால் சொல்லித் தரைப்பட்டவர். இங்ஙனே யெடுத்துக்காட்டியநுபவிக்க வேண்டியவை அபரிமிதம்.

(20) திருவாய்மொழிக்கும் பெரிய திருமொழிக்கும் மிகச்சிறந்த தனியன் அமைந்தது. "பக்தாம்ருதம் விச்வஜநாநு மோதனம்" "நெஞ்சுக்கிருள்கடிதீபம்"— இவ்விரண்டு தனியன்களிலும் ஆச்சரியமான ஐந்து விசேஷங்கள் நேனிலுமினியவை. "சீரார்சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெறவும்," *பொங்கு புகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும் தங்குமனம் பெறவும் இராமாநுசமுனியை வணங்கி வேண்டுதல் இவ்விருவர் அருளிச்செயலுக்கே ஒக்கும்.

## அழகிய மணவாளனும் மணவாளமாமுனியும்

(தி. அ. அநந்தாழ்வான்)

கச்சிநகரில் வரந்தருமாமணிவண்ணன் ஸன்னிதியில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் வரவரமுனிகளுத்ஸவம் 1—11—72 தொடங்கி 10—11—72 வரை சிறப்புடன் நடந்தேறியது. இரவு வேளைகளில் நம் ஸ்வாமியின் உபந்யாஸம் செவிக்கமுதமாய் நிறைந்து நினைதொறும் இன்பம் பயக்குமதாய் இருந்தது. விடாயாற்றி சாற்றுமுறையன்று (18—11—72) ஸ்வாமி அருளிய உபந்யாஸம் அரங்கனுக்கும் அரவரசுக்குமுள்ள ஐக்கியத்தைப் பற்றியதாய் அற்புதமென்ன வமைந்தது. அதனைத் தழுவியே இக்கட்டுரை வரையப்படுகின்றது.

பொய்யிலாமுனி தன் அடியிணை பணியும் பரவாதி பீகரர் தாம் பணித்த வரவரமுனிசதகத்தில் கெண்டையுங் குறளும் முதலான பத்தராவிதன் பத்தினுபதோற்றத்தோடு ஸௌம்யோபயந்த்ரு முனிகட்குள்ள ஸாம்யத்தை அருளிச்செய்த பின் அர்ச்சாவதார ஸாம்யத்தை அநுபவிக்கின்றார். அவற்றுள் "அஹிநபோக ப்ரவணஸ்ஸமிந்தே ஸ்ரீரங்கதாமா கில ரங்கபர்த்து:, ஸாதர்ம்யமாஸாத்ய யதங்க்ரி பக்த: பாயாத்ஸந: ஸௌம்யவரோ முநீந்த்ர:" (36) என்னும் ச்லோகம் அணியரங்கனுக்கும் மணவாளமாமுனிகட்குமுள்ள ஸாம்யத்தை உணர்த்துமதாகும். இனி நம் ஸ்வாமி அரங்கனுக்கும் அரவரசுக்கும் உள்ள ஒருமைப்பாட்டினைக் காட்டியவாற்றைத் தெரிவிக்கின்றோம்.

"வண்டினமுரலுஞ்சோலை" என்னும் திருமாலைப் பாசுரத்தில் வண்டும் கொண்டலும் மயிலும் குயிலும் இடம் பெற்றுள்ளன. இவை இவ்விருவரையும் குறிப்பனவாய்த் திகழ்கின்றன. "வண்டினமுரலுஞ்சோலை"-எம்பெருமானை வண்டாகக் கொண்டனர் தண்டமிழ் மாறன். "தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு" என்பது அவர்தம் திருவாக்கு. வண்டானது மலரிற்பெருந்தி மாரத்தைக் கிரகித்தற்போன்று எம்பெருமானும் ஆழ்வார்தம் நளினமன்ன நெஞ்சிற் கிடந்த ஸகலார்த்தங்களையும் கிரகித்தனன். மலர்கள் வண்டின் வரவெதிர்பார்த்து வாசனை திசைதொறும் வீசிநிற்கும். அதுவே போன்று ஆழ்வாரும் ஆர்வுற்றிருக்க அவரின் முன்னம் பாரித்துத் தான் அவரை முற்றப்பருகினனன்றே எம்பெருமான்! வண்டுகள் ஆறுகால்களைப் பெற்றுள்ளமையின் ஷட்பதம் எனப்படுவன. எம்பெருமானும் அரும்பண்புகள் ஆறு [ஞானம் முதலியன] நிரம்பப்பெற்றவன் [பகவச் சப்த வாச்யனுகையாலே]. காதலால் மறை நான்கு முன்னோதியபட்டனும் வண்திருவரங்கனை

வண்டாகப் பட்டரும் உருவகிப்பர். "லக்ஷ்மீ கல்பலதோத்துங்க ஸ்தந ஸ்தபக சஞ்சல:, ஸ்ரீரங்கராஜ ப்ருங்கோ மே ரமதாம் மாநஸாம்புஜே." (ஸ்ரீரங்கராஜஸ்தவம். பூர்வசதகம்—10) "திருமாமகளாகிற கற்பகவல்லியின் வாராளுமிளங்கொங்கையாம் பூங்கொத்திற் சுழலுமதான அணியரங்கனென்னும் மணிவண்டு அடியேனுடை நெஞ்சென்னும் கமலத்துஅமர்ந்து களித்திடுக" என்பது இதன் கருத்து.

இனி மாமுனிகளை வண்டாகக் கொள்வதன் பொருத்தத்தைக் காண்போம். வண்டுக்கு வடமொழியில் த்விரேப: என்றொரு பெயருண்டு. இரண்டு ரேபங்களை ('ர' என்னும் எழுத்து) உடையது என்பது இதன் பொருள். வண்டைக் குறிப்பிடும் ப்ரமர: என்னும் சொல்லில் ரேபமிரண்டுமுளதன்றே. மாமுனிகளும் இவ்வகையான் த்விரேப: என்னத்தக்கவரென்க. என்னை? வரவரமுனி என்னும் ஸ்வாமி திருநாமத்தில் இது காணலாம். மேலும் இவரடி பணிந்த நல்லாசிரியர்களும் பல விடங்களில் இவரை வண்டென்று கொண்டாடியுள்ளனர். "ராமாநுஜார்ய சரணம் புஜ சஞ்சரீகம்" (1), 'மஹதாஹ்வயபாதபத்மயோர் மஹுதுத்தம்ஸிதயோர் மதுவ்ரதம்' (43), "சடாராதி ஸ்ரீமத் வதந ஸரஸீஜாத மிஹிரஸ்ததிய ஸ்ரீபாதாம்புஜமதுகர:" (53), "யதீந்த்ரபதபங்கஜ ப்ருங்கவரம்" (85) என்று ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா வரவரமுனிசதகத்தில் போற்றியுள்ளனர். ஆழ்வார் புட்பாகனிடம் தூதுநல்கி விடும் புள்ளினங்கட்கு ஸ்வாபதேசம் அருளிச் செய்கையில் "என் பெறுதி என்ன ப்ரமியாது" என்கிற சூர்ணையில் வண்டுக்கு ஸ்வாபதேசம் உணர்த்துவர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். "குழல்வாய் வகுளத்தின் ஸாரம் க்ரஹித்து" என்பதும் இதே சூர்ணையில் காணப்படுவதாம். வண்டுகள் வகுளம் முதலிய மலர்களின் ஸாரமாம் தேனைப்பருகுதல் இயல்பே. அதுபோன்று மாமுனிகளும் வகுளாபரணரான நம்மாழ்வார் தம் சொன்மாலையின ஸாரத்தைக் கிரகித்தவர் ஆவர். திருவாய்மொழியின் ஸாரமாகத் தணவா நூற்றந்தாதி அருளிச்செய்தமையின் இஃது இனிதுணரப்படும். "வகுளமாலிநிபத்தபாவம்" (வரவரமுனிசதகம் 51) என்று கொண்டாட நின்றவர் மாமுனிகள். ["மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோம்" என்றருளிச்செய்தனர் மாமுனிகளும்).

"பயிலினமாலுஞ்சோலை"—அரங்கமேயமாயனைத் தோகைமா மயிலாக உருவகித்தனர் கருவிலே திருவுடைய பட்டர்.

> "ப்ரலய ஸமயஸுப்தம் ஸ்வம் சரீரைகதேசம் வரத! சிதசிதாக்ய்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணுந:, கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூந்வந் அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்."(ஸ்ரீரங்கராஜஸ்தவம். உத்தரசதகம் 44)

"பேரருளாள! "தோகைவிரிக்கின்ற பொறியார் மஞ்ஞை பேடைமயில் முன் அணிமாநடம் பயின்றுடுவதுபோன்று, ஊழிக்காலத்து உறக்கங்கொண்டவை போல் நின் திருவுடம்பில் ஒரு கூறாய் ஒன்றிநின்ற திரிவனவும் நிற்பனவுமாமவற்றை மழுங்காத ஞானத்தினால் பல்வகைப் பெருவிறலுலகமாய்ப் பரப்பித் திருமடந்தை முன்பே நீ விளையாடுதி" என்றவிதில் எம்பெருமான் மயிலாகக் கொள்ளப்பட்டது அறிந்தின்புறற்பாற்று.

இனி மாமுனிகள் விஷயமாக நோக்குவாம். மயில் தன் உடலில் அடங்கிய அழகிய கலாபத்தை விரிப்பதுபோன்று மாமுனிகளும் தமது திருவுள்ளத்திற்கிடந்த கலேகளே (வியாக்கியானமருளும் போது) விரித்துச் சிறந்தனர். "வ்யாக்க்யா கர்ப்பம் வரவரமுநே த்வந்முகம்" (வரவரமுனிசதகம்—46) என்று எறும்பியப்பாவும் "ஹ்ருத்யா யஸ்ய ஸரஸ்வதீ ஸுவிமலா" (வரவரமுனிசதகம்—17) என்று பரவாதி பீகரரும் அருளிச்செய்தமை நோக்கத்தக்கது. "ரஹஸ்யத்ரயாக்க்யம் ஜகத்தேசிகோக்தம் ரஹஸ்யத்ரயாந்தர்கதார்த்த ப்ரதீபம், விவவ்ரே ஜகத்குப்தயே ய: க்ருபாப்தி: ஸ ந: பாது ரம்யோபயந்தா முநீந்த்ர:" (வரவரமுனிசதகம் 73) என்னும் ச்லோகரத்னமும் காணவுரியதாம். மயில்கள் ஆலித்தழைத்தற்போன்று மாமுனிகளும் முகில்வண்ணனைக் கண்ணுரக் கண்டுகொண்டு ஆட்டமேவி அலந்தழைத்தயர் வெய்திய மெய்யடியாராவர்.

"கொண்டல்மீதணவுஞ்சோலே"—கண்டவர் சிந்தை கவரும் கடிபொழில் தென்னரங்கனைக் கொண்டல் என்பர் நம்பெருமாள்குமாரர்.

> "ஸிஞ்சேதிமம் ச ஜநமிந்திரயா தடித்வாந்
> பூஷாமணித்யுதிபிரிந்த்ர தனுர்ததாந:,
> ஸ்ரீரங்கதாமநி தயாரஸ நிர்பரத்வாத்
> அத்ரௌ சயாலுரிவ சீதல காளமேக:."
>
> (ஸ்ரீரங்கராஜஸ்தவம், பூர்வசதகம் 82)

"பூமன்னுமாதெனும் மின்னிற்பொலிவதாய், இழை பலவற்றில் பதித்த பன்மணிகளினெளியாகிற ககனவில்லொன்று ஏந்தியதாய், நல்லருள் எனும் நீர் நிரம்பப்பெற்றமையான் திருவரங்கப்பெருநகருள் வரைமேல் (அனந்தனென்னும் அணிவிளங்குமுயர் வெள்ளேயணையைமேவிப்) பள்ளிகொள்வதான, குளிர்ந்துறைகின்ற கார்முகில் அடியேனையும் நனைத்தருள்க" என்பது இதன் கருத்தாம்.

"குணவாள பட்டரிருகோகனகத்தாள்சேர் மணவாளதாச"ரான ஐயங்காரும் இதனை அடியொற்றியே" காவிரிவாய்ப் பாம்பணைமேல் கருமுகில்போற் கண்வளரும் கருணை வள்ளல்" (திருவரங்கக் கலம்பகம் 100) என்றருளிச் செய்தனர். இனி, "தம் ப்ரபந்நஜந சாதகாம்புதம்" என்று மாமுனிகளையும் முகிலெனவே போற்றினர் பெரியோர். கைம்மாறு கருதாது மழைபொழிந்து உலகினை உய்விக்கும் முகிலே வண்மையிற் சிறந்ததென்று செப்புவர் சான்றோர். மாமுனிகளும் கொண்டலனைய வண்மையினர் என்பதனை "தஸ்மை நித்யம் நமஸ்ஸ்யாத் வரவரமுநயே நிஸ்துலோதாரபூம்நே" [வரவரமுனி சதகம்—77] என்பதின் இனிதுணரலாம்.

"குயிலினங்கூவுஞ்சோலே"—கயல்துளு காவிரிசூழ் அரங்கனைக் குயில் என்றது நிறவொற்றுமையொன்றினலன்று. குயிலுக்கு வடமொழியில் "வநப்ரிய:" என்றொரு பெயர் வழங்கும். சோலேயில் விருப்புடைய தென்பதைக் குறிக்கும் இது. அரங்கனும் வநப்ரியனேயாவன். "ஆராமம் சூழ்ந்தவரங்கம்" என்றவிடத்து வியாக்கியானத்தில் 'ஆராமம்' என்பதற்கு மற்றைய திவ்ய தேசங்களேயே பெரியோர் பொருளாக வுரைத்தருளினர். அரங்கன் வநப்ரியனென்பது இதனின்றும் போதரும். ஆக, குயிலினையும் பொழிலரங்கனையும் வநப்ரிய சப்தத்தாற் குறிக்கலா

மென்க. குயில் 'மாவேறிமிழற்றும்' இயல்புடைத்தாதலின் மாவினிடத்துக் (மா—மாமரம்) குயிலுக்குள்ள பெருவிருப்பு உணரப்படும். அரங்களேவெனில் "அல்லி மலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்றபடியே மாவினிடத்து [மா—திருமகள்] பேரன்புடையவன் என்க.

குயிலானது பஞ்சமஸ்வரத்தை இனிதாகக் கூவும் தன்மைத்து. "பாரத: பஞ்சமோ வேத:" என்று பாரதம் புகழ்படைத்ததுபோல் "ஐந்தாம் மறை" என்னத்தக்க ஸ்ரீவசநபூஷணத்தை அருளிச்செய்த மாமுனிகள் குயிலினையொப்பர் என்க. மேலும் பஞ்சமோபாயத்தை உணர்த்தியருளியவராவர் மாமுனிகள். இதனை "ஸ்வைராலாபைஸ் ஸுலபயஸி தத் பஞ்சமோபாயதத்வம்" என்று எறும்பியப்பா [வரவரமுனிசதகம் 11] தெரிவித்தருளினர்.

குயில் பரப்ருதமென்று வடமொழியில் வ்யவஹரிக்கப்படும். அது போல் மாமுனிகளும் பராபிமானத்திலே ஒதுங்கினவராவர். [பராபிமானம்—பரனாகிய எம்பெருமானது அபிமானம், ஆசார்யாபிமானம் என்றும் கொள்ளலாம்.]

ஆக இவ்வகைகளான் அழகிய மணவாளனுக்கும் மணவாளமாமுனிகட்குமுள்ள ஒருமைப்பாடு நம் ஸ்வாமியால் இனிதுணர்த்தப்பட்டது. வழிபாடியற்று தற்பொருட்டு கங்கைநீரைச் செம்பிலிட்டுத் "கங்கையம்புனல் நிறை செம்பு" என்று புகன்றாலும் விரிந்துபரந்த கங்கைநீர் முழுதும் செம்பிலடங்கியதென்று யாரும் நினையார். நம் ஸ்வாமியின் உபந்யாஸமென்னும் மொழிபட்டோடும் அமுதப்பெருக்கை இவ் விளையபுன் கட்டுரையில் அடக்கியதாகக் கூறுதலும் இது போன்றதே என்க.

—★—





இங்கு திருக்குமாரரோடு லேவைஸாதிக்கும் பெரியவர் ஆழ்வார் திருநகரி திருவாய்மொழிப்பிள்ளை (கீழத்திருமாளிகை) திருமலாசாரியர் ஸ்வாமி நான்கு மாதங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவர். நம்மாழ்வார்க்கு ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமைசெய்த மஹாபாக்யசாலி திருக்குமாரரான சீராமப்பிள்ளையும் அவரையொத்த பாக்யசாலியே. இவர் நீடூழி வாழ்க.

# பண்டிதர்களின் பகுதி



தி. அ. கோபாலாசாரியர்

தி. அ. க்ருஷ்ணமாசாரியர்

திருப்பதியில் வாழ்பவர்களான ஸ்ரீ உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை குன்றபாக்கம் கிருஷ்ணமாசாரியர். 2. ஷை. கோபாலாசாரியர். இவ்விருவரும் ஸஹோதரர்கள். வித்வதக்ரஹாரமென்று ப்ரஸித்திபெற்ற மலையடி குன்றபாக்கத்தில் வாழ்ந்த ஸ்ரீமதுபயவே. தி. அ. வெங்கடவரதாசாரியர் ஸ்வாமியின்

திருக்குமாரரான (துரைஸாமியென்கிற) ராகவாசாரியரின் திருக்குமாரர்கள். இவர்களில் முதல்வர் நியாயவேதாந்த வித்வான். தமிழ் வித்வானுமாவர். இரண்டாமவர் வியாகரண ஸாஹித்யவித்வான். இவ்விருவரும் திருப்பதி கலாசாலையில் முறையே நியாய வியாகரண ப்ரவசன துரந்தரர்களாக விளங்கி வருகிறார்கள். [இவர்களின் கநிஷ்ட ஸஹோதரன் லௌகிக வ்ருத்தியில் வாழ்ந்துவருகிறான்.] இவர்கள் எலக்கு (P. B. A.) ஸாக்ஷாத் ஸ்யால புத்திரர்கள். இவர்களின் திருத்தகப்பனாரான ராகவாசாரியர் அறுபது பிராயமளவும் ஸ்ரீகாஞ்சியில் ஸ்கூல் மேஸ்டராக வாழ்ந்து, விச்ராந்திபெற்றபின் ஏறக்குறைய பதினாறு வருஷகாலம் திருமலையிலும் திருப்பதியிலும் மங்களாசாஸனபரராய் விளங்கிவந்து நேற்று புரட்டாசி மாதத்தில் திருப்பதியில் ஸ்வக்ருஹத்தில் திருநாடலங்கரித்தார். அவருடைய திருவத்யயன கோஷ்டியின் படம் காண்க.



ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதிகளான திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமியும் சிறிய ஜீயர்ஸ்வாமியும் தொடக்க கோஷ்டியையும் சாத்துமுறை கோஷ்டியையும் அலங்கரித்தெழுந்தருளியிருந்தது பரமக்ருபா பரீவாஹம். இவ்விரு ஸஹோதரர்களிடத்திலும் பெரிய ஸ்வாமிகள் ஆஸ்தானத்தை அலங்கரித்த நாள் முதலாகவே தண்ணளிமிக்கவர்.

—❋—



ஸ்ரீ. உ. வே. வித்வான்.

N. பக்தவத்ஸலமையங்கார், M. A; M.O.L., Mylapore.

இப்பெரியார் நெல்லூரில் பிறந்தவர். நெல்லூர் ஸ்ரீரங்கமன்னார் ஸன்னிதியில் இரண்டாந்தீர்த்த மிராசு குடும்பஸ்தர். ஸம்ஸ்கிருதம் தெலுங்கு தமிழ் ஆங்கிலம் ஆகிய நான்கு பாஷைகளிலும் ஸமமான ஞானமுடையவர். ஸ்ரீராமகிருஷ்ணப்ரபா என்கிற தெலுங்கு பத்ரிகைக்கு நெடுநாளாக உதவியாசிரியராக இருந்து வருகிறார். ஆங்கில ஆந்திர பாஷைகளில் மிகச்சிறந்த எழுத்தாளர். தெலுங்கு பாஷையில் நிகழும் நமது பதிப்புகளுக்கெல்லாம் இவரே மிக்க துணைபுரிபவர். ... ... *

# அடியேனுடைய சிந்தனைகள் (ப்ர-அ.)

அடியேன்பால் தனிப்பட்ட அன்புடைய பெரியீர்காள்!

மேலேகாணும் மகுடமிட்ட ஒருபெரியநூல் எழுதவேணுமென்று அடியேனுக்கு அவா மிக்கு வருகின்றது. அதற்கு முகவுரைபோல் இச்சுருக்கமானவிண்ணப்பம் காணீர். அடியேன்பால் அந்தரங்க ப்ரீதியுள்ளவர்களைமட்டும் நோக்கியே இந்த விண்ணப்பமென்பதை மீண்டும் விளம்புகிறேன். அடியேன் எண்பத்திரண்டாவது பிராயம் முடியுந்தருவாயிலிருக்கிறேனென்பதை மறந்திருக்கமாட்டீர்கள். 21—2—1964 தேதியன்று அடியேனுடைய வாழ்நாள் முடிவதாகவே யிருந்தது. அதற்கு முன்பும் 1958ல் வடநாட்டு யாத்திரையொன்றில் ஸ்ரீநாதத்வாராவுக்கும் ஸித்தபூருக்குமிடையில் நள்ளிருளில் கோரமான விபத்தொன்று நேருவதாயிருந்து தப்பிப்பிழைத்தேனென்பதை அப்போதே ஸ்ரீராமாநுஜன் வெளியிட்டிருக்கின்றது. ஸமீபத்தில் 27—10—72 தேதியன்று ஒரு சிறுபயணத்தில் அசிந்திதமாக நேர்ந்ததொரு ஸம்பவத்தை கர்ணகர்ணிகையாகக் கேட்டறிந்து "ஏதோ பெரிய விபத்தாமே, என்ன?" என்று கடிதமூலமாகக் கேளாதவர்களில்லை. இது பற்றிப் பல நூற்றுக்கணக்கான கடிதங்கள் இற்றைக்கும் வந்துகொண்டிருக்கின்றன. "இது ஆபத்தன்று, ஆச்சரியம், அற்புதம்" என்றே அடியேன் விடையிறுப்பது. ஆசார்யஹ்ருதயத்தில் "மூன்று தத்துக்குப் பிழைத்த" என்றொரு ஸூக்தி. ஆழ்வார்க்கு மூன்று கண்டங்கள் நேர்ந்து தப்பிப்பிழைத்ததாக அருளிச்செய்தபடி. அந்த மூன்று கண்டம் இன்னதென்று அறியப்பெற்றால் அவை ஆழ்வார்க்கு நேர்ந்த கண்டங்களல்ல எம்பெருமானுக்கு நேர்ந்தவையேயென்று உண்மையுணரலாம்.

நாற்றிசையிலும் அடியேனுக்குப் பலபல ஸுஹ்ருந்மணிகள் பல ஜாதிகளிலுமிருப்பதால் "ஆரோக்யம் தெரிவிக்கவேணும்" என்று எழுதிக்கொண்டே வருகிறார்கள். காஞ்சீபுரத்தில் தபால் டிலவரிகள் மூன்று விசையுண்டு. ஒவ்வொரு விசையிலும் இத்தகைய கடிதம் கிடைத்துக்கொண்டேயிருக்கும். எல்லாருமறியச் சுருக்கமாக வெளியிடுகிறேன். உடலில் எவ்விதமான பிணியுங்கிடையாது. பரிபூர்ணமான ஆரோக்யமே. வயதுக்குத்தக்கபடி நேத்ரபாடவம் குறைந்திருப்பதுண்டு. லகுசிகித்ஸைகள் ஏதோ நடந்து வருகின்றன. ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி வானமாமலை சின்னகலியன் ஸ்வாமி சரமகாலத்தில் (ஒருவருஷத்திற்குமேலாக திருக்கண் பார்வை அடியோடில்லாமலே யெழுந்தருளியிருந்தார். அப்போது நியமனம் பெற்று ஸ்ரீஸ்வாமியை ஸேவிக்க வானமாமலைக்கு விடைகொண்டேன். அப்போது மடத்தைவிட்டு மேலக்கோவிலில் எழுந்தருளியிருந்தபடி. அடியேன் விடைகொண்டதறிந்து "ந த்வா பச்யாமி கௌஸல்யே ஸாது மா பாணிநாஸ்ப்ருச" என்கிற தசரத வாக்கியத்தை ஸாதித்துக்கொண்டு "கைமேல் என்கை வைத்து" என்கிற முறையில் அணிமிகு தாமரைக் கையைத் தந்தருளிச்சோதிவாய்திறந்து பணித்தவை—அன்றிரா முழுவதும் துஞ்சாமுனிவராய் ஸாதித்தவை..............(இதை இப்போது ஸசேஷமாக நிறுத்துகிறேன்.

சில நாட்களாக இரவில் ஒரு நொடியும் உறக்கமின்மையாலே குர்வத்ரூபங்களான கரணங்களில் தலையாய கரணம் வாளாகிடக்கமாட்டாமையாலே எண்ணிறந்த சிந்தனைகள் ஒன்றின்மேலொன்றாக நிகழ்கின்றன. அவை அடைவே வெளிவரும்.

# உபந்யாஸக ஸௌபாக்யம்

(முன் தொடர்ச்சி)

## 8. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் திவ்யத்ரயம்

உலக வழக்கிலும் நூல்வழக்கிலும் மிகச் சிறந்ததைச் சொல்லுமிடத்து திவ்யமென்னுஞ் சொல் யாவராலும் கையாளப் படுகிறது; ததீயாராதனை திவ்யமாயிருந்தது. உபந்யாஸம் திவ்யமா யிருந்தது அழகிய மணவாளன் ஸேவை அதி திவ்யமாயிருந்தது—என்றிப்படியே எங்கும் வார்த்தைப்பாடு உள்ளது பகவத் கீதையில் கண்ணபிரான் தன்னுடைய அவதாரத்தையும் சேஷ்டிதத்தையும் சிறப்பாகச் சொல்லு மிடத்து "ஜந்ம கர்ம ச மே திவ்யம்" என்கிறன். விச்வரூபம் காண்பதற்காக அர்ஜுனனுக்குச் சிறந்த சக்ஷுஸ்ஸைக் கொடுப்பதாக அருளிச் செய்யுமிடத்து "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்கிறன் இவற்றால் திவ்யபதத்தின் சீர்மை அறியத்தக்கது.

நம்முடைய ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்றையும் சொல்லுமிடத்து திவ்யபதத்தைச் சேர்த்தே சொல்லிவருவதானது தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகின்றது. ப்ரமாணங்களில் தலையானது திவ்ய ப்ரபந்தம், ப்ரமாதாக்களின் தலையானவர்கள் திவ்ய ஸூரிகள். ப்ரமேயங்களில் தலையானவை திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாகத் திகழுமழகு நம்முடைய ஸம்ப்ரதாயத்திற்கே அஸாதாரணமான செல்வமா யிருக்கும். இதில் ஒரு விஷயம் ஆராய்ச்சி முறையில் அறிவிக்கப்படுகின்றது.

மதுரகவியாழ்வாரும் ஆண்டாளுமுள்பட ஆழ்வார்கள் பன்னிருவரு மருளிச் செய்த திவ்ய ப்ரபந் தங்களே நாலாயிர திவ்ய ப்ரபந்தமென்று வழங்கப் பெறுகின்றன. இவற்றுள் இராமாநுச நூற்றந்தாதியும் அடங்குகின்றது. திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணி நுண் சிறுத்தாம்பு. இராமாநுச நூற்றந்தாதி ஆகிய இந்நான்கும் திவ்ய ப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான வொரு பெருமையைப் பெறுவதற்கு உரிமையற்றவை போல் காணப்படுகின்றன. ஏன்? திவ்யப்ரபந்தங்களுக்கு அஸாதாரணமான பெருமை ஏதென்னில், உகந்தருளின நிலங்களாகிய திவ்ய தேசங்களை விசேஷமாகப் பேசுகையாம். எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதார மென்னும் ஐந்து நிலங்களும் திவ்யப் பிரபந்தங்களில் பேசப்பட்டிருந்தாலும் அர்ச்சாவதாரப் பெருமைகளைப் பேசுவதிலேயே இவற்றுக்கு விசேஷ நோக்கு என்பது ஆசாரியர்கள் திலையிட்ட விஷயம். வேதத்திற்குப் பரத்வத்திலே நோக்கு; பாஞ்சராத்ரங்களுக்கு வ்யூஹத்திலே நோக்கு; இதிஹாஸ புராணங்களுக்கு விபவத்திலே நோக்கு; தர்மசாஸ்த்ரங்களென்கிற ஸ்ம்ருதிகளுக்கு அந்தர்யாமியிலே நோக்கு; திவ்ய ப்ரபந்தங்களுக்கு அர்ச்சையிலே நோக்கு—என்னும் விஷயமானது ஆசார்ய ஹ்ருதயத்தில் "அதவா, வேதவேத்யந்யாயத்தாலே பரத்வ பர முதுவேதம்" என்று தொடங்கியுள்ள (70) சூர்ணையின் வியாக்கியானத்திலே விசதமாகக் காணலாகும். நாம் திவ்ய தேசங் களின் பெருமைகளை யநுபவிக்க வேணுமானால் திவ்யப்ரபந்தங்களிலல்லது வேறு எதிலும் அனுபவிக்க முடியாதன்றே. ஆகவே திவ்ய தேசப்பெருமையைப் பகர்வதே திவ்யப்ரபந்தங்களுக்கு அஸாதாரண மான பெருமையென்பது நிர்விவாதமாகும்.

இப்படிப்பட்ட பெருமை திருப்பல்லாண்டு முதலிய மேலே குறித்த நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கு ஸம்பவிக்க ப்ரஸக்தியில்லாதிருக்கிறது. ஏனெனில்; 1. பெரியாழ்வார் பாண்டியராஜனுடைய ஸபை யிலே பரதத்வ நிர்ணயம் பண்ணி விரைந்து திருமுத்து யானையின்மீது ஊர்வலம் வருகையில் அந்த மஹோத்ஸவத்தைக் காணவந்த பரமபதநாதனை நோக்கியே பல்லாண்டு பாடித் திருப்பல்லாண்டென்கிற திவ்யப்ரபந்தத்தை யருளிச் செய்தாராதலால் அப்போது திவ்யதேசப் புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தி யில்லை யாயிற்று.

2. திருப்பாவை கண்ணபிரானுடைய விபவ காலத்திலேயே நேராக ஆய்ச்சிகள் ஆசரித்த படியை அநுகரித்துப் பேசப் பிறந்த பிரபந்த மாதலால் இதிலும் திவ்யதேசப் புகழ்ச்சி எதுவும் செய்ய ப்ரஸக்தி யில்லையாயிற்று.

3. கண்ணிநுண் சிறுத்தாம்பு, நம்மாழ்வாரையே தெய்வமாகக் கொண்டு அவரைத் துதிப்பதற் கென்றே தோன்றின பிரபந்த மாகையாலும்,

4. இராமாநுச நூற்றந்தாதி எம்பெருமானாரையே தெய்வமாகக்கொண்டு அவரைத் துதிப்பதற் கென்றே அவதரித்ததாகையாலும் இவற்றிலும் திவ்யதேசப் புகழ்ச்சிக்கு ப்ரஸக்தியில்லையாயிற்று.

ஆயினும் திவ்ய தேச ப்ரஸ்தாவமில்லாத பிரபந்தம் திவ்யப்ரபந்தமாகமாட்டா தென்று கருதியே மேற்சொன்ன நான்கு பிரபந்தங்களிலும் அந்தந்த ப்ரபந்த கர்த்தாக்கள் திவ்யதேச ப்ரசம்ஸையை ஒரு வாறு புகுத்தியுள்ளார்கள்.

1. திருப்பல்லாண்டில் திவ்யதேச ப்ரசம்ஸையைப் புகுத்தியிருக்கிற விதம் யாதெனில்; அதில் ★அல்வழக் கொன்றுமில்லா ★ என்கிற பதினோராம் பாட்டில், பாகவதோத்தமரான செல்வநம்பி யென்னு மொரு பெரியாரை த்ருஷ்டாந்தமாக எடுத்துக்காட்டத் திருவுள்ளம்பற்றி, அப்பெரியார் திருக்கோட்டியூ ரென்னும் திவ்யதேசத்தில் வாழ்ந்தவராதலால் அதனைக் கூறும் வழியாலே திருக்கோட்டியூரை ப்ரசம்ஸித் திருக்கிறார். ★ அணி கோட்டியர்கோ னபிமான துங்கன் செல்வனைப் போல ★ என்றவிடத்து, அணி கோட்டி யென்றது திருக்கோட்டியூரேயாம். இப் பிரபந்தத்தில் ஒருவாறு திவ்யதேச ப்ரஸ்தாவம் வரு வதற்காகவே ★ அணிகோட்டியர்கோன் ★ என்கிற ஸ்ரீஸூக்தி புகுவிக்கப் பட்டதென்க. மேலுள்ள தான பலச்ருதிப் பாசுரத்தில் ★ வில்லிபுத்தூர் விட்டு சித்தன் விரும்பிய சொல் ★ என்றவிடத்து ஸ்ரீ வில்லிபுத்தூராகிற திவ்யதேசத்தின் ப்ரஸ்தாவ மிருந்தாலும் அதனால் த்ருப்தியுண்டாக வழியில்லை போலும்.

2. இனி கண்ணிநுண் சிறுத்தாம்பிலும் திவ்யதேச ப்ரஸ்தாவம் ஒருவாறு புகுந்திருக்கின்றது; அதில் பாசுரந்தோறும் குருகூர் என வருவதால்.

3. இராமாநுச நூற்றந்தாதியில் ★ கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனை ★ என்றும் ★தென்னத்தியூர் கழலிணைக்கீழ் ★ என்றும் ★ கண்ணமங்கை நின்றானைக் கலை பரவும் ★ என்றும் ★ பொன்னரங்க மென்னில் மயலே பெருகுமிராமானுசன் ★என்றும் ★நிறைவேங்கடப் பொற்குன்றமும்★ என்றும் ★ இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ் சோலை யென்னும் பொருப்பிடம் ★ என்று மிங்ஙனே பல பாசுரங்களில் ப்ராஸங்கிகமாக திவ்யதேச ப்ரசம்ஸை செய்திருக்கையாலே அதுதன்னிலும் திவ்யதேச ப்ரதிபாதநம் குறையற்றதாயிற்று.

4. இனி திருப்பாவையில் இக்குறையில்லாமையை விவரிக்கிறோம். உண்மையில் திருப்பாவை யில் ஒரு திவ்யதேசத்தின் ப்ரசம்ஸையும் ப்ராப்தமாகவில்லை. ★ திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி அங்கு அப்பறை கொண்டவாற்றை ★ என்று, அக்காலத்தில் கோபிகள் செய்தபடியை அப்படியே அநுகாரம் செய்தும் அநுவாதம் செய்தும் அருளிச்செய்த பிரபந்த மன்றோ திருப்பாவை. இதில் அவ்வாய்ச்சிகள் செய்யாத திவ்யதேச ப்ரசம்ஸையை ஆண்டாள் செய்ய ப்ரஸக்தி இல்லையன்றோ. ஆனால் யசோதைப் பிராட்டி கண்ணனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டினபடியை அவளுடைய பாவனை யினால் கூறுகின்ற பெரியாழ்வார் ★ குடந்தைக் கிடந்தானே! தாலேலோ ★ என்றது போலவும், ஆய்ச் சிகள் கண்ணபிரான் செய்த தீமைகளை யசோதைப் பிராட்டியிடம் வந்து முறையிட்ட படியைச் சொல்லு மிடத்து ★ சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான் ★ என்றது போலவும், ★ மன்னுகுறுங்குடியாய் வெள்ளறையாய் மதிள் சூழ் சோலை மலைக்கரசே கண்ணபுரத்தமுதே!... ஆடுக செங்கீரை ★ என்று யசோதை செய்யாத திவ்யதேச ப்ரசம்ஸைகளை ஆழ்வார்தாம் செய்திருப்பது போலவும், திருவாய்மொழியில் ★ சூழ்விசும்பணி முகில் என்னும் பதிகத்திலே பரமபதாநுபவங்களைப்

